# 95 ஆவது அகவையில் காலடி எடுத்து வைக்கும் மூனா கானா என்ற இரண்டெழுத்துக் கலைஞரை வணங்கி வாழ்த்துவோம்

பேராசிரியர்.சி.மௌனகுரு



மூனா கானா என்ற இரண்டு எழுத்துக்களால் பிரபல்யமான மு.கணபதிப்பிள்ளை அடிப்படையில் ஓர் கூத்துக்காரர் சிறு வயதில் வேடம் கட்டிக் கூத்தாடியவர். இளவயதில் கூத்தால் ஆரையம்பதி மக்களின் இதயம் கவர்ந்தவர், கூத்துபற்றி பேசும் புலமைத்துவம் மிக்கவர். கூத்தைக் கூத்துக்கலையாகப் பார்க்கும் கூத்துக்கலைஞர். இன்று கூத்து பற்றி பெரும் கும்மாளமிடும் சில கூத்துக் கத்துக்குட்டிகள் அவரிடமிருந்து கற்க வேண்டியவை அநேகம்.

நானும் அவரிடம் நிறையவே கற்றுக்கொண்டேன். இன்று அவருக்கு வயது 95.

95 வயதில் படுத்த படுக்கைதான், அல்லது நடக்கத் துணை வேண்டும். இதோ இந்த இளைஞர் யாரின் துணையுமின்றி நடக்கிறார். கேட்டால் கூத்துப்பாடல்களைத் தன் பொக்கைவாய் திறந்து பாடுகிறார். விட்டால் ஆடியும் விடுவார்.

கூத்து பற்றி அவரிடம் பேசுங்கள் அள்ளி அள்ளி வழங்குவார். அத்தனை ஞானம் கூத்தில் இவரை நான் கண்டது எனது 17 ஆவது வயதில். நான் அப்போது சிறு 16 வயதுப் பையன் அவரோ அரும்பு மீசைக் குறும்புக்காரன். ஆம் அவர் நிற்குமிடம் கலகலப்பால் நிறைந்திருக்கும். சிரிப்பொலிகள் பீறிட்டுக் கிளம்பும். மட்டக்களப்புப் பேச்சுத்தமிழ் அவர் பேச்சில் கரைபுரண்டோடும். அதில் ஆரையம்பதி தமிழ் உச்சரிப்பு கலந்து அழகுதரும்.

1958 ஆம் ஆண்டு மட்டக்களப்பு கச்சேரிக்கு முன் தமிழரசுக்கட்சி சத்தியாக்கிரகப் போராட்டம் நடத்திய காலம் அது. மட்டக்களப்பின் பல கிராமங்களிலிருந்தும் சாரி சாரியாக மக்கள் கால் நடையாக வந்து கோட்டையை முற்றுகையிட்ட காலம். ஆரையம்பதியின் பிரதிநிதிகளாக அங்கு நின்ற கலைஞர்களும் கவிஞர்களுமான ஆரையூர் அமரன், மூனாகானா, அன்புமணி, நவம், ஆரையூர் இளவல் போன்றோர் அங்குதான் எனக்கு அறிமுகமாகினர்.

நான் அப்போது தமிழுணர்ச்சி மிக்க துடிப்பான மாணவன்,மாணவர் இயக்கத் தலைவன் வேறு பிறகென்ன. உணர்ச்சி மிக்கோர்கள் ஒன்றாயினர். மூனாகானா, எளிய சொற்கள் கொண்டு கிண்டலாகப் பாடி நாட்டு நடப்புகளைக் கூறுவதிலும் போலித்தனங்களை அம்பலப்படுத்துவதிலும் வல்ல வராக இருந்தார்.

தமிழ்ச் சொற்கள் முக்கியமாக மட்டக்களப்புத் தமிழ்சொற்கள் அவர் உத்தரவுக்கு கட்டுப்பட்டுச்சேவகம் புரிந்தன.

1945 களின் நடுப்பகுதியில் என நினைக்கிறேன் அவர் அரசினர் ஆசிரிய கலாசாலையில் ஆசிரிய மாணவனாக இருந்தபோது இலச்சுமி கல்யாணம் என்றவோர் கூத்தை எழுதி படச்சட்ட மேடையில் அரங்கேற்றினார். மட்டக்களப்புக் கூத்து இன்னொரு திசை நோக்கிப் பயணிக்கத் தொடங்கிய ஆரம்பப் புள்ளி அது வட்டக்களரியில் ஆடப்பட்ட கூத்து மட்டக்களப்பிலேயே படச்சட்ட மேடைக்கு மாற்றம் கண்டது மாத்திரமல்ல இராஜ இராணிக் கதைகளை விடுத்து சமூக பிரச்சனைகளையும் கூறலாயிற்று.

இதனைப்பலர் அறியார் கூத்துக்கலைஞரே இங்கு அந்தக் கூத்தில் மாற்றங்களை ஏற்படுத்துகிறார். 1965 இல் பேராதனை பல்கலைக்கழகத்தில் பேரா. வித்தியானந்தன் மட்டக்களப்புக் கூத்தைச் செம்மைப்படுத்தி அதில் பெண்களையும் ஆட வைக்கிறார். அதில் ஒரு கூத்தான இராவணேசன் 1965 இல் மேடை காண்கிறது. அது 1965 இல் மட்டக்களப்பு நகரசபை மண்டபத்தில் காட்டப்படுகிறது.

கூத்துக்குப் பெயர் போன மட்டக்களப்பில் மிகுந்த தயக்கத்தோடுதான் அதனை மேடையிடுகிறார் வித்தியானந்தன். சீலாமுனையைச் சேர்ந்த நான்தான் இராவணன், நாவற்குடவைச் சேர்ந்த தருமலிங்கம்தான் இராமன், வந்தாறுமூலையைச் சேர்ந்த பரசுராமந்தான் இலக்குமணன், போரதீவை சேர்ந்த பேரின்பராஜாதான் இந்திரஜித். பெரும்பாலானோர் மட்டக்களப்பார். .மட்டக்களப்பு இளைஞர்களால் அங்கும் கூத்தில் ஒரு மாற்றம் ஏற்படுத்தப்படுகிறது.

அந்நாடகத்தைப் பார்த்து ரசித்து எம்மைக் கட்டி அணைத்து முத்தமிட்டு வாழ்த்தி ஆசீர்வதித்த மூனா கானா என்னுடன் இன்னும் நெருக்கமானார்.

கூத்து எங்களை நெருக்கியது. 1978 இல் எனது கலாநிதிப்பட்ட ஆய்வுக்காக (அதன் தலைப்பு மட்டக்களப்பு மரபுவழி நாடகங்கள்)

அதில் நான் மட்டக்களப்பு கூத்துக்களை நுணுக்க ஆய்வு மேற்கொண்டேன்) மட்டக்களப்பின் சகல கிராமங்களுக்கும் சென்றேன். அக்கிராமங்களில் தங்கினேன், ஏடுகள் சேகரித்தேன். சில அண்ணாவிமாரிடம் கூத்துக்கள் பழகினேன். கூத்துக்குப் பேர் போன ஆரையம்பதியில் சில நாட்கள் தங்கினேன், அப்போது எனக்கு மூனாகானா செய்த உதவிகள் மிக மிக ஆனந்தம்.

இன்று மட்டக்களப்பின் கூத்து முடியாகப் பலரும் படம் போடும் அந்த வடமோடிக் கிரீடம் இருக்கும் வீட்டுக்கு என்னை அழைத்துச் சென்றார். கண்ணாடி பெட்டியினுள் இருந்த அதனை வெளியே எடுத்து எனக்கு அவரும் அரையூர் இளவலும் காட்டியமை நேற்றுப்போல இருக்கிறது.

"பழமை இப்படித்தான் அன்றிருந்தது பையா"
என்று அவர் பழமையின் திசையை எனக்குக் காட்டினார் என்று இன்று எண்ணுகின்றேன்.



1 9 9 1

நான் யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்திலிருந்து மாற்றலாகி கிழக்குப்பல்கலைக் கழகம் வந்து விடுகிறேன். கலைப்பீடாதிபதியுடன் நுண்கலைத் துறைத் தலைவரும் ஆகிவிடுகிறேன்.

அடிக்கடி என் வீடு வருவார் அல்லது நுண்கலைத்துறைக்கு வருவார். "இந்த இராவணேசனை இனோருக்காப் போடுங்கோ" என்று கூறுவார். 2002 ஆம் ஆண்டில் இராவணேசனை மீண்டும் மேடையிட்டேன். நான் அப்போது 50 வயதைத்தாடி இருந்தேன். எனவே நான் அதில் ஆடாமல் மாணவர்களைப் பயிற்றினேன்.

அத்தோடு கிழக்குப் பல்கலைக் கழக நுண்கலைத்துறை உலக நாடக தின விழாவை 1998 இல் ஆரம்பித்தது. வருடம் தோறும் அதனைத் தொடர்ந்தது. ஒருவாரம் தொடர்சியாக நடைபெறும் அவ் நாடக விழாவில் இறுதி நாள் நுண்கலைத் துறை தயாரிக்கும் ஒரு நாடகம் மேடையேறும்.

2002 இல் இராவணேசன் மேடை கண்டது அதனைக்கான முக்கிய விருந்தினராக மூனாக்கானாவை அழைத்திருந்தோம். வித்தியானந்தன் இராவணேசனைத் தயாரித்தது 1964 இல் இப்போது 38 வருடங்களின் பின் நான் தயாரிக்கிறேன். இதில் பல மாற்றங்களைச் செய்திருந்தேன். உடையில் இசையில் அசைவுகளில், அளிக்கை முறையில் எனப்பல நாடகம் தொடங்கியது. எனக்கருகில் அமர்ந்து இருந்தார் மூனா கானா உன்னிப்பாக ஒவ்வொன்றையும் அவதானித்துக்கொண்டிருந்தார். அவர் என்ன நினைத்திருப்பார் என்ன சொல்லப்போகின்றார் என ஆவலுடன் காத்திருந்தேன் பரீட்சை முடிவினை எதிர்பார்த்திருக்கும் மாணவன் போல அவர் மேடையில் ஏறினார் பின்வருமாறு கூறினார்.

"மட்டக்களப்பு மக்களாகிய நாங்கள் இவ்வளவு நாளும் அருமை பெருமையாக கட்டிக்காத்து வீட்டில் வைத்து வளர்த்த எமது குமரான எங்கள் கூத்தை கிழக்குப் பல்கலைக்கழக மாப்பிள்ளைக்குக் கட்டிக் கொடுக்கிறோம்.

அந்தப் பெண்ணைக் கண்கலங்காமல் பார்த்துக் கொள்வதுடன் அவளை



நன்கு பராமரித்து வளர்க்கவும் வேண்டும் என மருகப்பிள்ளையிடம் கேட்டுக்கொள்கிறோம்.

இராவணேசன் கூத்தும் எனக்கு மாப்பிள்ளையில் பெரும் நம்பிக்கையைத் தந்திருக்கிறது"

பின்னர் பல தடவைகள் அவரைக்காணவும் உரையாடவுமான பல சந்தர்ப்பங்கள் கிடைத்தன நான் 2008 இல் பல்லைக்கழகச் சேவையிலிருந்து ஓய்வு பெற்று விட்டேன்.

என்னிடமிருந்த 3000 க்கு மேற்பட்ட அரிய நூல் களையும் 500 க்கு மேற்பட்ட நாடகம், கூத்து, கர்நாடக இசை, நாட்டார் இசை, சிறந்த சினிமாப்படங்கள், சிறந்த நடனங்கள் அடங்கிய டிவிடிக்கள் என்பனவற்றையும் என்ன செய்வதென்று தெரியவில்லை. பல்கலைக்கழகத்தில் நான் விட்டு வந்த 100 டிவிடிக்களுக்கு என்ன நடந்தது என்று தெரியவில்லை. அந்த ஆவணங்கள் கணக்கிலெடுக்கப் படவில்லை. நான் பல்கலைக்கழகத்தை அதன் பின் நம்பத் தயாராயில்லை.

அந்த 100 டிவிடிக்களிலும் கிழக்குப் பல்கலைக்கழகம் கடந்த காலங்களில்

நுண்கலைத்துறையில் செய்த நிகழ்வுகளும் பதியப்பட்டிருந்தன. மிக முக்கியமான பதிவுகள் அவைநல்ல வேளையாக அதன் பிரதிகள் என்னிடமிருந்தன. அவை அங்கு இல்லாமல் போனது அல்லது இல்லாமல் ஆக்கப்பட்டமை எனக்கு ஓர் ஞானோதயத்தை ஏற்படுத்தியது.



அத்தோடுகிழக்குப்பல்கலைக்கழகநுண்கலைத் துறையில் என் ஓய்வின் பின் தொடர்ந்து வேலை செய்வதற்கான சந்தர்ப்பங்களும்அளிக்கப்படவில்லை. என்னிடம் நாடகம் கூத்து சம்பந்தமாக எத்தனையோ திட்டங்கள் இருந்தன. அவற்றைப் பரீட்சிக்க அல்லது செய்துபார்க்க அமுல்படுத்த எனக்கோர் தோதான இடம் தேவைப்பட்டது. தேவ உலகில் இருந்து கீழே தள்ளப்பட்ட திரிசங்குக்காக விஸ்வாமித்திரர் ஒரு புதிய தேவ உலகையே ஆரம்பித்தமை என் மனதில் பதிந்த ஓர் புராணத் தொன்மம். அந்த விஸ்வாமித்திரத் திமிர் எனக்குப் பிடித்த ஓர் குணாம்சம் .

நான் என் பரிசோதனைகளை நடத்த 2010 இல் மட்டக்களப்பில் ஓர் அரங்க ஆய்வுகூடத்தை ஆரம்பித்தேன். சிருஸ்டித்துவ ஆற்றலை வளர்ப்பதும் கூத்தை அதன் பல பரிமாணங்களுக்கு எடுத்து செல்வதும்,நவீனத்துவத்திற்கு மாணவர்களை அறிமுகம் செய்வதும் நமது மரபிலிருந்து நமக்கான நவீன நாடகங்களை உருவாக்குதலும் என் நோக்கம்.அதற்கு மிகப்பயிற்சி பெற்றோர் தேவை பட்டனர்.

ஒரு பெரிய வீடு எடுத்து அங்கு என் அனைத்து நூல்களையும் டிவிடிக்களையும் எடுத்துச் சென்றதுடன் வாரம் தோறும் தெரிவு செய்யப்பட்ட மாணவர்களுக்கு கூத்துப்பயிற்சியும் நவீன நடிப்புப் பயிற்சியும் அளிக்க ஆரம்பித்தேன்.

இந்த நேரத்தில் மூனாக்கானாவையும் நன்கு பயன் படுத்திக் கொண்டேன். அவரை மாணவர்களுக்கு அறிமுகம் செய்தேன். அவர் வருகையும் உரையாடல்களும் மாணவருக்கு பெரும் அனுபவ விரிவுரைகளாகின.

இன்று காணப்படும் சில அண்ணாவிமார் போலல்ல அவர். இன்று தாளக்கட்டுகளை ஒழுங்காகச் சொல்ல முடியாத, அழகாகவும் தெளிவாகவும் பாட முடியாத, இலக்கிய அனுபவம் அற்ற, பாடல்களின் பொருளுணர்ந்து அவற்றைப்பிரித்து விளக்கிச் சொல்ல முடியாத அண்ணாவிமார்கள் சிலரைப் பல்கலைக்ழகங்களிற் காணுகின்றேன், இவர்களிடம் பயிலும் மாணவர்கள் நிலையை எண்ணிக் கவலையுறுகிறேன். கூத்துப்பாடலின் சொற்களை அவற்றின் பொருளுணர்ந்து கற்பிக்கும் திறனை இவர்கள் மூனாக் கானாவிடம் கற்பது நல்லது.

அரங்க ஆய்வு கூடம் அவரது 90 ஆவது பிறந்த நாளை 2013 இல் நினைவுகூர்ந்து கொண்டாடியது அவர் அன்று ஓர் இளைஞன் போல மாணவர் மத்தியில் வீற்றிருந்தார்.சில பாடல்களைப் பாடியும் காட்டினார். அரங்க ஆய்வு கூட மாணவர்களும் சில கூத்தாட்டங்களை நிகழ்த்திக் கூத்துப்பாடல்களைப் பாடியும் காட்டினர். மூனா கானா மனம் நெகிழ்ந்து போய் இருந்தார். இந்த நிகழ்வில் அன்புமணி, நவம் ஆகியோரும் கலந்து கொண்டனர்.

அவ்வாண்டு இராவணேசனை மீண்டும் மேடையிட்டோம். இப்போது இதன் நடிகர்கள் பழையவர்கள் அல்ல. புதியவர்கள். இன்னும் சற்றுப்புதுமையாக அதனை நாம் தயாரித்திருந்தோம். ரசித்து ரசித்துப் பார்த்தார். சொல் சொல்லாகக் காட்சி காட்சியாக ரசித்தார்.

நாடகம் முடிய நான் அவரிடம் சிரித்துக்கொண்டே கேட்டேன்.

*“நீங்கள் கட்டிக்கொடுத்த குமர்ப் பெண்ணை மாப்பிளை நன்றாக வைத்துக்கொண்டிருக்கிறாரா”?*

அவர் என்னை நன்றாக உற்றுபார்த்தார். கட்டித் தழுவிக்கொண்டு கொண்டு அட்டகாசமாகச் சிரித்தபடி சொன்னார்.

“திறமான மாப்பிளை,
அருமையான மாப்பிளை”

---



# மூத்தோரைப் போற்றும் முதல்பணி இனிதிலும் இனிதே

ஆரையூர் இளவல்

அனைவரையும் அன்புடன் ஆதரிக்கும் ஆரையூர் மண்ணின் பாரம்பரிய பண்பாட்டுப் பாசம் மிக்க சொத்துக்களின் வரிசையில் அகவை தொண்ணூற்று ஐந்திலும் ஆனந்தமுடன் பவனி வருகின்ற புகழ் பூத்த மக்கள் கவிமணியான திருநிறைச் செல்வர் முருகப்பன் கணபதிப்பிள்ளை (மு.க ஐயா) குறிப்பிடத்தக்கவராவார்.

அன்பும் பாசமும் தான் மண்ணில் வாழுகின்ற ஒவ்வொரு மனிதருக்கும் ஆண்டவனால் வழங்கப்பட்ட அரும்பெரும் கொடையாகும். இந்த அன்புக் கொடையை முழு மனதோடு முழுமையாகப் பயன்படுத்தி நமது முன்னோர்கள் வாழ்வியலைச் சிறப்பித்தார்கள். நமது முன்னோர்கள் தந்த நாட்டார் இலக்கியங்கள் இதற்கு சான்று பகர்கின்றன.

ஒருவரை அன்பு பாசத்துடன் பார்த்து அவருடன் அன்பு கலந்த வார்த்தைகளால் அளவளாவி அவர்களது நல்வாழ்வுக்கு ஊக்கந் தருகின்ற மனப்பாங்கு நமது மூத்தோர்களிடம் நிறையவே காணப்படுகின்றன.

இன்றைய விழா நாயகனாகப் போற்றப்படுகின்ற திருநிறைச் செல்வர் மு.க ஐயாவும் அத்தகைய போற்றுதலுக்குரியவராவார்.

பேரன்மார்களுக்கு ஐயா அவர்கள் கூறும் அறிவுரைகள் வருமாறு:

'பேரன்மாரே கொஞ்சம் வாருங்கடா. இந்தப் பெத்தப்பா சொல்வதைக் கேளுங்கடா. வீரமுடன் கல்வி செல்வமெல்லாம் பெற்று இந்த மேதினியில் நல்லா வாழுங்கடா"



**மு.க ஐயா அவர்களைப் பற்றி**

| | |
|---|---|
| பெயர் | : முருகப்பன் கணபதிப்பிள்ளை |
| பிறப்பு | : 22.01.1924 |
| தந்தை | : முருகப்பன் |
| தாய் | : தங்கம்மா |
| திருமணம் | : 02.05.1954 |
| மனைவி | : சின்னப்பிள்ளை |
| மக்கள் | : இரு புதல்வர்கள் இரு புதல்விகள் |
| தொழில் | : பயிற்றப்பட்ட தமிழ் ஆசிரியர், அதிபர் |

**கலை இலக்கியப் பணிகள்**

தலைவர் ஆரையூர் கவின் கலை மன்றம்
இந்து சமய கலாச்சாரப் பண்பாட்டு
அமைச்சின் நாட்டுப் பாடல்
மதியுரைக் குழு உறுப்பினர்.

**கூத்துகளில் ஈடுபாடு**

லெட்சுமி கல்யாணம்
பரிகாரி மகன்

இவை கொழும்பிலும் பல இடங்களிலும் பல தடவைகள் ஆடப்பட்டு பாராட்டுப் பெற்றவை

**கிராமியக் கலைகள்**

காவியப்பாடல்கள்
காவடிப்பாடல்கள்
கொம்புமுறிப் பாடல்கள்

பல கிராமியப் பாடல்களும் இயற்றியுள்ளார்.

**தொடர் கவிதைகள்**

காலா கோலம்
புளுகுப் புராணம்

1948 களில் தினகரன் பத்திரிகையில் தொடர்ச்சியாக வெளி வந்தவை.

**சின்னத்திரை**

ஆரையூர் இளவலின் 'மண் சுமந்த மகேசன்" சின்னத்திரையில் பாண்டிய மன்னனின் அதிகாரியாக அற்புதமாக நடித்துப் புகழ் பெற்றவர் ( 1980 )

**வெளியிட்ட நூல்கள்**

'இலக்கிய நெஞ்சம்"
'கவிதை நெஞ்சம்"

**பெற்ற பரிசுகள்**

*புலவர் மணி பெரியதம்பிப்பிள்ளை நினைவுப் பணிமன்றம் நடாத்திய கவிதைப் போட்டிகளில் இரு தடவை முதல் பரிசு.*

**பெற்ற விருதுகள் கௌரவங்கள்**

**கலை மணி**
*மட் மாவட்ட கலாச்சாரப் பேரவை (1987)*
**கலாபூசணம்**
*இந்து சமய கலாச்சாரத் திணைக்களம் (1995)*
**மக்கள் கவிமணி**
*மட் ஆசிரிய கலாசாலை (1996)*
**தலைக் கோல் விருது**
*கிழக்குப் பல்கலைக்கழக நுண் கலைப் பீடம்(2001)*
**ஆளுநர் விருது**
*கிழக்கு மாகாணம் (2007)*

நமது முன்னோர்களும் மூத்த தலைமுறையி-னரும் வாழ்ந்து காட்டிய பண்பாட்டு விழுமியங்கள் தொடர்ந்து பாதுகாக்கப்படல் வேண்டும் எனும் நெஞ்சம் நிறைந்த நல்ல சிந்தனைகளுடனும் மனஉறுதியுடனும் செயற்படுகின்ற ஆரையம்பதி சந்திரசேகரன் மணிசேகன் மற்றும் சொக்கலிங்கம் பிரசாத் அவர்களின் 'கா' கலை இலக்கிய வட்டத்தினருக்கும் அதன் உறுப்பினர்கள் ஆலோசகர்கள் அனைவரையும் அன்புடன் போற்றி வாழ்த்துவதில் அன்பு பாசத்தில் நனைந்து குளிர்ந்து போயிருக்கின்ற ஆரையூர் மண்மாதா பெருமிதம் அடைகின்றாள்.

*இன்பமே சூழ்க எல்லோரும் என்றென்றும் வாழ்க !*

---



# மூனாக்கானாவின் கலை இலக்கிய தடங்கள்

## பேராசிரியர்.ச.யோகராசா

ஆரையம்பதியைச் சேர்ந்த மூனாக்கானா (மு.கணபதிப்பிள்ளை-1924) கூத்து, நாடகம், வில்லுப்பாட்டு, கவிதை, சிறுகதை, கட்டுரை, ஆய்வு முதலான கலை இலக்கயத்துறைகள் பலவற்றில் ஈடுபட்டவர். எனினும் இயற்கை அனர்த்தம், செயற்கை அனர்த்தங்கள் காரணமாக அவற்றுள் சிலவே அச்சுருப் பெற்றுள்ளன.

1940 களிலே எழுத்துலகப் பிரவேசம் செய்தாலும் முதல் நூலுருவை 2001 இலும் (இலக்கிய நெஞ்சங்கள் 2001) அடுத்த நூலுருவை 2007இலும் (கவிதை நெஞ்சம்) கண்டு கொண்டவர். அவற்றையும் நூலுருப் பெறாத ஒருசில ஆக்கங்களையும் அடிப்படையாகக்கொண்டே இவ்வுரை நிகழ்கிறது.

**1. கவிதைத் துறையில்.**

1940கள் அளவிலே கவிதைத் துறையில் பிரவேசித்த மூனாகானா ஏறத்தாழ 200 கவிதைகளவிலே எழுதியிருப்பினும் ஏறத்தாழ 50 கவிதைகளைக் அடிப்படையாகக் கொண்டே இத்துறையில் இவர் பதித்த தடங்கள் பற்றி அவதானிக்க முடிகிறது. ஈழத்தில் நவீன கவிதை சென்ற நூற்றாண்டின் நாற்பதுகளளவிலேயே கால்கொண்டது. இக் காலப்பகுதியில் மட்டக்களப்புப் பிரதேசத்திலிருந்து எழுத ஆரம்பித்தவர்களுளொருவரான மூனாகானா நாற்பதுகளின் முடிவுவரையான சமகாலக் கவிஞர்களிலிருந்து வேறுபட்டு தனக்கெனத் தனித்துவமான பாதையொன்று அமைத்துக் கொள்கிறார். இவ்விதத்தில் இக் காலப்பகுதியல் எழுதப்பட்ட புளுகுப்புராணம், காலாகோலம் ஆகிய இரு நெடுங்கவிதைகளும் முக்கிய கவனிப்புக்குரியனவாகின்றன.

கேலிப்பாட்டு என்ற உபதலைப்போடு 'புளுகுப்புராணம்' தினகரனில் பிரசுரமானது. தமிழ்க் கவிதை அதுவரை கண்டறியாத முற்றிலும் புதுமை-யான விநோதமான கற்பனைப் படைப்பாகவுள்ளது 'புளுகுப்புராணம்'.(இவ் அடிப்படையில் பாரத-யின் குயில்பாட்டுடன் மட்டும் ஒப்பிடலாம் என்று தோன்றுகிறது) முற்றிலும் குருவிகளையே பாத்திரங்களாகக் கொண்ட புளுகுப்புராணம் நாடு நகர்க் காண்டம் - வாகனப்படலம், மானிடர் காண்டம் - தொழிலா-ளர் படலம், ஆரணிய காண்டம் - மிருக சாதிப்படலம் என்ற மூன்று உபதலைப்புகளில் வெளிவந்தது. புளுகுப்புராணம் அதன் பெயருக்கேற்ப புளுகு என்பதையே அடிச்சரடாகக் கொண்டுள்ளது.

முதற் காண்டமான நாடுநகர்க் காண்டம் பின்வருமாறு ஆரம்பிக்கிறது.

நாட்டிலுள்ள குருவியெல்லாம் கடக்க மாட்டாமல் – சொகுசு
நாட்டினநூல் வண்டி வள்ளம் மலிஞ்சி போச்சுது
கேட்டுக்கீட்டு மயங்கவேணாம் பொறுத்துக்கொள்ளுங்க – இன்னும்
கேட்டிருந்து விசயங்களை புரிஞ்சி கொள்ளுங்க –சாமி புரிஞ்சி கொள்ளுங்க

மற்றொரு நெடுங்கவிதையான காலாகே-ாலம் கால மாற்றத்தை அதனூடாக சமூக மாற்றத்தை வெளிப்படுத்துகின்றதாகவுள்ளது. பின்வருவது அதன் ஒரு பகுதியாகும்.

பூமியில அமர்ந்து போசனம் புசித்தது – அந்தக்காலம்
இப்போ – மேசையும் காரண்டியும் கத்தியும் வந்தது இந்தக்காலம்
மயிர்கள் நிந்தாமல் கொண்டை கட்டியது – அந்தக்காலம்
இப்போ – நரிவால் போல தொங்க விடுவது இந்தக்காலம்
பெரியவர் திருமணம் பேசி முடிப்பது – அந்தக்காலம்
இப்போ – இருவரும் காதல் திருமணம் செய்வது இந்தக்காலம்

எமக்குக் கிடைத்துள்ள ஆரம்பகாலத்து இன்னொரு கவிதை 'இலங்கை மாதே' என்பது. இது இலங்கை மாது பொருளாதாரத்துறையில் பின்னடைந்திருப்பதைப் பற்றி விளித்து வினவுவதாயுள்ளது.

ஐம்பதுகள் வரை கிடைத்துள்ள மேற்குறிப்பிட்ட மூன்று கவிதைகளுள் முதலிரு நெடுங்கவிதைகளும் முற்று முழுதாக வித்தியாசமான நோக்கில் பாடப்பட்டுள்ளன. இவை இத்தகைய நோக்கிலும் போக்கிலும் இக் காலப்பகுதியில் உருவான கவிஞர் குழாத்தினரெவரும் கவிதைகளைவையும் பாடியிருக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

மேற்கூறியவற்றில் முதலாவது, புளுகுப்புராணம் கேலிப்பாட்டு என்ற தலைப்பிற்கேற்ப புளுகு என்பதை மட்டும் பாடுபொருளாகக் கொண்டு கற்பனையின் உச்சமாக வெளிப்படுகிறது. இவ்வாறாக மேற்கூறியவாறான கேலி அல்லது நகைச்சுவை இயல்பு மூனாகானாவின் கவிதைகளளின் முக்கிய இயல்பாக தொடர்ந்து வருகிறது. ஆனால் பிற்பட்ட காலத்தில் அது சமூகப் பார்வை கலந்ததாக அமைகிறது என்பதே கவனத்திற்குரியது.

கிராமியப் பண்பாட்டினை புதிய கோணத்தில் பார்க்கிறார். உதாரணமாக 'சம்பந்தி' என்ற கவிதை நெருங்கிய உறவுடைய இரு குடும்பங்கள் வழமைே-பால் சண்டை பிடிப்பதையும் பின்னர் சமாதானமாகி பிள்ளைகளுக்கு சம்பந்தம் பேசுவதையும் மண்வாசனை மிளிர பதிவுசெய்துள்ளது.

காலமாற்றமும் நகைச்சுவையும் கலந்த பாணியிலான மூனாகானா எழுதிய கவிதைகளில் சில, பெண்கள் வாழ்க்கையில் ஏற்பட்ட மாற்றங்கள் பற்றிய கவிதைகள் முக்கியமானவை

ஆண்களும் பெண்களும் ஓர்சம மென்பதை
அர்த்தனா ரீஸ்வரர் காட்டிநின்றும்
வேண்டா விலங்குகள் பூட்டும் மனிதரின்
வில்லத் தனம்போகக் கும்மியடி

தமது கவிதைகள் எவற்றையும் புதிய பார்வையில் படைக்கின்ற மூனாகானா குடும்பங்களுக்கிடையான பிரிவையும் புதிய பார்வையோடு தருகின்றார். பின்வருவது அத்தகையவற்றுளொன்று.

காலையிலே காப்பி எண்ணம் வந்தால் 'கிச்சின்'
கதவழியில் போயிருந்து கலங்குகிறார் உன்
சேலை சட்டை கொடிமீது கிடக்கக் கண்டு
சிறுபிள்ளை போல்தேம்பி அழுகிறாரு
வேலையிலும் கவனமில்லை 'லீவு' போட்டு
வெறும் வயிற்றாய் பட்டினியால் உன்னைஎண்ணி
மூலையில் கிடக்காரு புருசனென்று
முழுவதையும் சொல்லிநீ அழைத்துப்பாரு
வில்லத் தனம்போகக் கும்மியடி

இவ்விடத்தில் கவிதை வெளிப்பாட்டுமுறைபற்றி யொன்று கூறவேண்டும். எமது தமிழ்க் கவிதைப் பாரம்பரியத்தில் தூது, கோவை, உலா, பிள்ளைத் தமிழ், கும்மி, ஆற்றுப்படை பிரபந்த வடிவங்களும், புராணம் முதலான வடிவங்களுமுள்ளன. நவீன கால ஈழக் கவிஞர்கள் 19ஆம் நூற்றாண்டிலிருந்தே அத்தகைய வடிவங்களூடாக சமூககஞ்சார் விடயங்களைப் பேச முற்பட்டனர். கனகி புராணம், கோட்டுப் புராணம், தத்தை விடுதூது, முதலிய 19ஆம் நூற்றாண்டிலும் காதலி ஆற்றுப்படை, தந்தி விடுதூது, எலி விடுதூது, முதலானவற்றை 20ஆம் நூற்றாண்டிலும் தந்திருக்கின்றனர். இப்பின்புலத்தில் நின்று மூனாகானாவும் அவ்வழியில் முற்குறிப்பிட்ட புளுகுப்புராணத்தையும் பிற்காலத்தில் நாய் விடுதூதையும் எழுதியிருப்பதும் பாராட்டப்படவேண்டிய விடயமாகிறது.

மூனாகானாவின் நகைச்சுவைக் கவிதைகள் பிற்காலத்தில் சமூக நோக்குடன் மட்டுமன்றி அரசியல் நோக்குடனும் எழுந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

ஓராறு வருடங்கள் உனையே நம்பி
ஓமெனவே வளைந்துநான் வணங்கிவந்தேன்
பாராளு மன்றமது கலைந்து விட்டால்
ஆராக இருந்தாலும் பல்லைக்காட்டி
அண்ணாச்சி தம்பியென்று முறை கொண்டாடி
ஏராளம் பரிகலங்க சூழவந்தே
என்னையிரு கைகூப்பி வணங்குந்தேவே

இருபதாம் நூற்றாண்டிலிருந்து படைப்பாளிகள் சமூகத்துடன் மட்டுமன்றி கடவுளுடன் பேசவும் ஏசவும் ஆரம்பித்துவிட்டனர். இருபதுகளில் பாரதிதாசன் கடவுளர்களை ஏசினான். புதுமைப்பித்தன் கடவுளை மெட்றாஸ் கடைக்கு அழைத்துச் சென்று உரையாடினான். மூனாகானாவும் தனது கவிதையென்றில் கடவுளுடன் உரையாடுகிறார்.

மேற்கூறிய விடயங்கள் தவிர இயற்கை, தமிழ், ஆசிரியர், தாய், தைத்திருநாள், முதியோர், சான்றோர் வாழ்த்து, பிரிவுபசார வாழ்த்து, அஞ்சலி, வரவேற்புப்பா முதலான விடயங்களும் மூனாகானா வினால் எழுதப்பட்டுள்ளன. தமிழ், இயற்கை, சிறுவர் பாடல்கள் சிலவும் மெல்லிசைப் பாடல்கள் ஒருசிலவும் எழுதப்பட்டிருக்கின்றன. பாடசாலைக் கீதங்களும் சில எழுதப்பட்டுள்ளன. (விரிவஞ்சிஅவை தரப்படவில்லை)

மேற்கூறிய ஆரம்பகால பிற்கால கவிதைகளை அடிப்படையாகக் கொண்டு மூனாகானாவின் கவிதைகளின் தனித்துவம் பற்றி பின்வருமாறு குறிபபிடலாம்.

1. கிராமிய மக்களது வாழ்க்கை, பண்பாடு சமூகமாற்றம் முதலியன மண்வாசனையுடன் இடம்பெறுதல்
2. நகைச்சுவை மிக முக்கியமாதல் (சமகால கொத்தமங்கலம் சுப்புவின் செல்வாக்கே அதற்கு காரணமாகும்)
3. நாட்டார் பாடல் வடிவம்
4. உயிர்ப்பான பேச்சுமொழி
5. பாத்திரங்களும் உரையாடலும் இடம்பெறல் (கூத்து செல்வாக்கு இதற்கு காரணமாகலாம்)

ஈழத்து நவீன கவிதைச் செல்நெறியில் காலத்திற்குக் காலம் உருவான மொழியுணர்ச்சி வெளிப்பாடு, முற்போக்குச் செல்வாக்கு, போர்க்கால அவலங்கள் முதலான விடயங்கள் மூனாக்கானாவின் கவிதைகளில் வெளிப்படவில்லை. வெளிப்பட வேண்டுமென்பதும்இல்லை. ஏனெனில்படைப்பாளியின் தனி உலகம், தனித்துவமான உலகம். (புகழ் பூத்த மணிக்கொடி எழுத்தாளர்கள் எவரும் சமகால இந்திய விடுதலைப் போராட்டம் பற்றி எழுதினாரல்லர்)

## 2. கட்டுரைத்துறையில்

கட்டுரையும் நவீன இலக்கிய வடிவங்களுளொன்று என்பதை பலரும் அறிவதில்லை. மூனாகானா ஏறத்தாழ ஐம்பதுகள் தொடக்கம் இத்துறையில் பிரவேசித்திருப்பினும் பிற்பட்ட காலத்திலெழுதிய கட்டுரைகளே கிடைக்க கூடியனவாகவுள்ளன. இவற்றை பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

### 2.1 இரசனைக் கட்டுரைகள்

இரசனை நோக்கில் நாட்டார்பாடல் கலந்த கட்டுரைகள் பலவற்றை கிழக்கிலங்கை ஆய்வாளர்கள் பலரும் எழுதியிருப்பினும் அவை பலவும் கற்பனை மிகுந்த நோக்கிலெழுந்துள்ளன. மாறாக இவரது இரசனை நோக்கில் ஆய்வுக்குரிய சாயலும் கலந்திருப்பது கவனத்திற்குரியது. உதாரணமாக பின்வரும் பகுதியை குறிப்பிடலாம்.

..... உலகத்தில் அழகுராணியாக தெரிவு செய்யப்படும் பெண்ணைவிட பேரழகு உள்ள பெண் இலைமறைகாயாக இருக்கின்றனர். இதே போன்று தான் கூத்துப்பாடல்களும்.

சந்த சிறப்பும், அணிநலன்களும், ஓசை நயமும் கொண்ட இப்பாடல்கள் பழம் பெரும் புலவர்களின் பாடல்களைப் போலவே கவிதை சுவை நிறைந்தவை இவ்வாறான பாடல்கள் தென் மோடிக்கூத்துக்களில் ஏராளமாக உள்ளன.........

எவ்வாறாயினும் முற்குறிப்பிட்டவாறான இரசனைக் கட்டுரைகள் பலரால் எழுதப்பட்டிருப்பினும் கூத்துப் பாடல்களை இரசனை நோக்கில் பார்த்தவர் மூனாகானாவாகவே இருக்க முடியும்.

### 2.2 நாட்டார் கலைகள்

#### 2.2.1 கூத்துக்கலை

மேற்கூறிய விடயம் பற்றி மூனாகானா எழுதியவற்றுள் இரு கட்டுரைகள் முக்கியமானவை. ஒன்று ‘கூத்து ஒரு நோக்கு’ இது மட்டக்களப்பு கூத்துப் பற்றி பரவலாக அறியப்படாத தகவல்களைத் தருகிறது.
உதாரணம் :

1. மட்டக்களப்பு வடமோடி தென்மோடிக்கும் மலையாளக் கூத்துகளுக்குமான தொடர்புகள்.
2. இவ்விருவகைக் கூத்துகளும் அப் பெயர்கள் பெற்றமைக்கான காரணம்.

மற்றொரு கட்டுரையான ‘கூத்தை நவீனமயப்படுத்தல்’ என்பது (முன்னோரிடத்தில் குறிப்பிட்டது போன்று) அவ்வழியில் சென்று மூனா கானா செய்த சாதனைகள் பற்றிய அவரது வாக்குமூலமாகிறது.

இரசனை நோக்கில் கூத்துப் பாடல்களை அணுகுகின்ற மூனாகானாவின் கட்டுரைகள் பற்றி ஏலவே குறிப்பிடப்பட்டுள்ளது.

#### 2.2.2 மருத்துவம் - சோதிடம் - மாந்திரீகம்

நாட்டாரியல் நோக்கிலே பாரம்பரிய அறிவியல் கலைகளாகக் கருதப்படும் மேற்குறிப்பிட்ட ‘முக்கூட்டுக்கலைகள்’ பற்றிய விரிவான அறிமுக நிலை ஆய்வுகள் அரிதாக இடம்பெற்றுள்ளன. இப்பின்புலத்தில் அவைபற்றிவிரிவாகவும்தெளிவாகவும்அமைந்துள்ளதொரு கட்டுரையையும் ‘முக்கூட்டுக்கலைகள்’ என்ற பெயரில் தந்துள்ளார் மூனாகானா.

### 2.2.3 நாட்டார் வழிபாடுகள்

உதாரணம் சக்கரை அமுது வழிபாடு. மேற்கூறிய வழிபாட்டு முறைபற்றி விரிவான முதலாய்வு என்று கருதத்தக்கது. அதுபற்றி மூனாகான எழுதியுள்ள கட்டுரையொன்று. அக்கட்டுரையின் ஆரம்பப் பகுதி மட்டும் இவ்விடத்தில் இடம்பெறுகிறது :

"இது சர்க்கரை அமுது என்பதன் திரிபாகும். இது மட்டக்களப்பில் பொருளாதார வசதி படைத்தவர்களின் வீட்டிலே செய்யும் ஒரு சக்தி வழிபாடாகும். மலையாளத்தில் பெரும்பாலும் நாயர் இனத்தவர்களின் வீடுகளில் செய்யும் இந்த வழிபாடு மட்டக்களப்பு மக்களும் மலையாள பரம்பரையைச் சேர்ந்தவர்களாகையால் இங்கும் இது நடை பெறுகிறது. பெரும்பாலும் இது வழக்கொழிந்து வந்தாலும் சில வீடுகளில் இன்னும் நடைபெறுகிறது."

மாரியம்மன் வழிபாடு : ஆரையம்பதி வம்மிக்கேணி மாரியம்மன் கோயிலில் நிகழுகின்ற மாரியம்மன் வழிபாடு பற்றி அதனுடன் தொடர்புபட்ட கதைகள், அது நடைபெறும் முறைகள் என்றவாறு அலசுவதாகவுள்ளது மேற்குறிப்பிட்ட கட்டுரை.

முருக வழிபாடு – கண்ணகி வழிபாடு : மேற்கூறிய அடிப்படையில் ஆரையம்பதி கந்தசுவாமி கோயில் பற்றியும், கண்ணகிம்மன் கோயில் பற்றியும் புதிய தகவல்கள் கொண்ட பல கட்டுரைகள் மூனாகானா வினால் எழுதப்பட்டுள்ளன. விரிவஞ்சி அவை இங்கு பேசப்படவில்லை.

### 2.2.4 வாய்மொழிப்புலவர்கள்

குறிப்பாக மட்டக்களப்பு பிரதேசத்திலும் மலையகத்திலும் அனுபவக் கல்வி மட்டும் பெற்ற புலவர்கள் பலர் இருந்துள்ளார்கள். இன்று மிருக்கிறார்கள். இத்தகையோர் வரிசையில் ஆரையம்பதியைச் சேர்ந்த மடக்கர் கந்தவனம் புலவரை வெளியுலகிற்கு இனங்காட்டுகின்ற சில கட்டுரைகளும் மூனாக்கானாவினால் எழுதப்பட்டிருப்பது குறிப்பிடத் தக்கது.

### 2.2.5 எண் சீர்திருத்தம்

தமிழில் எழுத்துச் சீர்திருத்தம் பற்றிய பல ஆய்வுகள் தமிழில் நடந்துள்ளன. ஈழத்தில் ஐம்பதுகளளவில் வித்துவான் சா.இ.கமலநாதன் அத்தகையதொரு ஆய்வுக்கட்டுரையை எழுதியிருந்தார். தமிழ் எண்வரிசையிலும் அவற்றைச் சொல்லும் முறையில் சில குறைபாடுகள் அல்லது கஸ்டங்களிருப்பதை நாமறிவோம். ஆய்வுக்குரிய மேற்கூறிய சிக்கலை பரந்த அடிப்படையில் – சங்ககால எண்முறை தொல்காப்பியர், பவனந்தியார் ஆகியோர் எண்புணர்ச்சியின்போது எதிர்நோக்கிய பிரச்சினைகள் என்றவாறு அணுகி அவ்வாறான பிரச்சினைகளுள் ஒன்றிற்கு மட்டும் தீர்வினை எடுத்துக் காட்டியுள்ளார்.

### 2.2.6 விஞ்ஞானச் செய்திகள்

'வலவன் ஞான வானவூர்தி' என்று சங்க இலக்கியப் பாடல்வரியொன்றுள்ளமை பற்றி எம்மில் சிலரறிவோம். இவ்விதத்தில் கம்பராமாயணம், சீவக சிந்தாமணி, சித்தர் பாடல்கள், இந்துசமய நூல்கள் முதலானவற்றில் வரும் விஞ்ஞானச் செய்திகள் பலவற்றை ஒன்று திரட்டித் தந்து இலக்கிய ஆர்வலர்களை சிந்திக்கத் தூண்டுகிறது மூனாகானா எழுதிய 'தமிழ் இலக்கியங்களில் விஞ்ஞானச் செய்திகள்' அவரது அணுகுமுறையில் நிதானமிருப்பது கவனத்திற்குரியது.

### 3. சிறுகதைத் துறையில்

மூனாகானா நாவல் சிறுகதை என்பன எழுதுவதில் நீண்ட காலமாக ஈடுபாடில்லாதவராகக் காணப்பட்டார். எனினும் அன்புமணியின் தூண்டுதல் காரணமாக பிற்காலத்தில் சிறுகதைகள் எழுதியுள்ளார். கிடைத்துள்ள இரு சிறுகதைகளுளொன்று முன்குறிப்பிட்ட 'சம்பந்தி' என்ற கவிதையில் காணப்பட்ட செய்தியை சிறுகதை வடிவத்தில் தந்துள்ளது. 'குடுகுடுப்பைக்காரன்' (தினகரன் 08.09.2013) என்ற மற்றொரு சிறுகதையும் முற்கூறப்பட்ட லெட்சுமி கல்யாணம் என்ற கூத்தின் சிறுகதை வடிவமாகும்.

மேற்கூறிய இரு சிறுகதைகளிலும் வடிவ ஒருமைப்பாடு காணப்படுவதோடு பிரதேச வழக்காறு, பேச்சுமொழிப்பிரயோகம் சிறப்பாக வெளிப்பட்டிருப்பதும் குறிப்பிடத்தக்கது.

### 4. கூத்து - நாடகத்துறையில்

கூத்து எழுதியவர், அண்ணாவியார், நடிகர் என்ற விதங்களில் கூத்து துறையில் மூனாகானாவின் செயற்பாடுகள் முக்கிய கவனத்திற்குரியனவாகின்றன. கூத்துக்கள் பல எழுதியவரென்ற விதத்தில் மூனாகானாவின் முதற்கூத்து லெட்சுமி கலியாணம் (1947) என்பதனை மட்டக்களப்பு நாடக ஆர்வலர்கள் அறிந்திருக்கக்கூடும். ஆயினும் அக்கூத்து மட்டக்களப்பு கூத்து வரலாற்றில் மட்டுமன்றி ஈழத்து தமிழ்க்கூத்து வரலாற்றிலேகூட பெரும் பாய்ச்சலகளை ஏற்படுத்தியதொன்று என்பதனைப் பலரறியாதிருப்பர். அது பற்றியும் அதற்கான காரணம் பற்றியும் மூனாகானாவின் பேட்டியூடாக அறிவதில் தவறில்லை.

"நான்செய்த மாற்றங்கள் மூன்று, ஒன்று மகாபாரதம் இராமாயணம் போன்ற இதிகாசங்களிலும் புராணங்களிலுமிருந்த கதைகளை எடுத்துவிட்டு அதற்குப் பதிலாக சமூகக் கதையை புகுத்தியது. இரண்டாவது கிராமிய மண்வாசனையும் நகைச்சுவையும் சேர்த்தது.

மூன்றாவது இரவு பன்னிரெண்டு மணித்தியாலம் ஆடிய கூத்தை கிட்டத்தட்ட ஒரு மணித்தியாலம் ஆக்கியது. தெய்வானை, லெட்சுமி, விதானையார் இவர்கள்தான் பாத்திரங்கள்."

மேற்குறிப்பிட்ட மூன்று விடயங்களோடு கூறத் தவறியதொரு விடயம் பற்றயும் கூற வேண்டும் அதாவது வயல்வெளிகளிலும் கோயில் முன்றிலிலும் வட்டக்களரியிலே ஆடப்பட்டுவந்த கூத்து இப்போது படச்சட்ட மேடையிலே ஆடப்பட்டமை பற்றியும் நினைவுகூரவேண்டியவராகின்றோம். இதன் பின்னரே பேராசிரியர் வித்தியானந்தன் அவர்கள் ஒலி, ஒளி காட்சி அமைப்புகளில் மாற்றத்தை ஏற்படுத்தினாரென்பதனை மறந்துவிடுவதற்கில்லை.

இரண்டாவது மூனாகானாவின் நவீன நாடகக் கூத்தான பரிசாரி மகன் (1972) கொழும்பு லயன்வென்ற தியேட்டரில் 1977 இல் ஆடப்பட்டது. இந்நவீன கூத்து அக்காலத்தில் ஒரே நாளில் ஒன்றிற்கு மேற்பட்ட இடங்களில் மேடையேறியமை குறிப்பிடத்தக்கது.
'விவசாயி வேண்டும்' (1978), 'சூறாவளிக் கூத்து' (1980), 'அண்ணனும் தங்கையும்' (2004)



மூனாகானாவின் முதல் மேடை நாடகமான 'இருலேகா' 1945 இல் மேடையேறிற்று(?) 'எல்லோரும் ஓரினம்', 'கடிதம் வந்தது', 'அப்பனைத் திருத்திய மகன்', 'யமலோகத்தில்', 'சம்பந்தி', முதலியன ஏனைய நாடகங்களாகும். சிறுவர் நாடகமும் – உதாரணமாக 'கமலாகுட்டி' மூனாகானாவினால் எழுதப்பட்டுள்ளது.

பாடசாலைத் தேவைகளுக்காக மூனாக்கானாஎழுதிய மேடைநாடகங்களுள் ஒன்று 'இளங்கோவின் துறவு'(1969)

மூனாகானா நடித்துள்ள கூத்துகளுள் ஒன்று 'அலங்கார ரூபன்' இதில் அலங்கார ரூபனாக நடித்திருந்தார். அவர் முற்கூறப்பட்ட பரிசாரி மகன் கூத்தில் சாத்திரியாராக நடித்திருந்தார். மற்றொரு கூத்தான 'சுபத்திரை கலியாணம்' இலங்கை ஒலிபரப்புக் கூட்டுதாபனத்தில், ஆரையம்பதியில் ஒலிப்பதிவு செய்யப்பட்டு வானொ லியில் பல தடவைகள் ஒலிபரப்பப்பட்டன.

**5. வில்லுப்பாட்டு**

வில்லுப்பாட்டுக் கலையையும் விட்டு வைக்கவில்லை மூனாகானா. 'கதிராமன் புத்திரன்' (1958) 'குடிகேடு', 'ஒரே இனம்', 'பெற்றுவிட்டால் போதுமா?',முதலியன. இவரது வேறு வில்லுப்பாட்டுகளுள் சிலவாகும். 'குடி கேடு' பாடசாலைலத் தேவைக்காக எழுதப்பட்டது.

**6. கிராமிய நடனங்கள்**

மட்டக்களப்புமண்வாசனை கலந்து அரங்கேறிய மூனாகானாவின் கிராமிய நடனங்களும் பலவுள்ளன. 'சீரழியும் சின்ன வயது', 'புதுமைப் பெண்', 'கிழவனும் கிழவியும்', 'சுதந்திரத் தொழிலே வேண்டும்', முதலியன அன்னார் அரங்கேற்றிய ஏனைய நடனங்களுள் சில வாகும்.

**9. ஏனைய துறைகளில்**

வானொலிப் பேச்சுகள். பொதுக்கூட்டங்கள், கவியரங்குகள், பலவற்றில் பங்குபற்றியவர்களுள் முக்கியமான ஒருவராக மூனாகானா தன்னை இனங்காட்டியிருக்கிறார். எனினும் அவை பற்றிய பதிவுகள் மிக அரிதாகவேயிருப்பது விசனத்திற்குரியது.

வானொலிப்பேச்சு என்ற விதத்திலே 1945 ஆம் ஆண்டிலேயே கூத்துக்கலை பற்றி இலங்கை வானொ லியில் அவர் உரையாற்றியிருப்பது விதந்துரைக்கப்படவேண்டியதாயிருக்கிறது.

**மட்டக்களப்பு அரசினர் ஆசிரியர் கலாசாலையில்.**

1947 இல் உருவான மட்டக்களப்பு அரசினர்ஆசிரியர் கலாசாலையின் முதற் தலைலமுறை (1947 – 1948) ஆசிரிய மாணவராக திகழ்ந்தவர் மூனாகானா. பொதுவாக ஈழத்தையும் குறிப்பாக மட்டக்களப்பு பிரதேசத்தைப் பொறுத்தளவிலே நவீன கலை இலக்கிய உருவாக்கத்தில் இக்கலாசாலையின் பங்களிப்பு மிக முக்கியமானது. இவ்விதத்திலே 1947 – 48 காலப்பகுதியில் குறிப்பாக ஈழத்தின் கூத்துக்கலை வளர்ச்சியிலே முற்குறிப்பிட்டவாறு பெரும் பாய்ச்சல் ஏற்பட காரணமாக இருந்தவர் மூனாகானாவெனில் அதற்கான களத்தை அமைத்தது இக்கலாசாலை.

இத்தொடர்பில் மூனாகானா பின்வருமாறு கூறியிருப்பதைமறப்பதற்கில்லை."சமூகக்கதைஒன்று கூத்து வடிவில் ஆக்கப்பட்டால் எப்படியிருக்கும் என்றுபார்ப்பதற்காகவேலெட்சுமிகலியாணம்என்ற கூத்தை எழுதினேன். (லட்சுமி கலியாணம் அல்ல) 1947 இல் ஆசிரியர் கலாசாலை மாணவர்களைக் கொண்டு இக்கூத்து அரங்கேற்றப்பட்டது. இது

அமோக வரவேற்பைப் பெற்றது" கலாசாலை வளவிற்குள் மட்டும் "என்னுடன் ஆசிரிய கலாசாலையில் பயின்றவர்கள் தங்கள் ஊர்களுக்குக் கொண்டு சென்று அங்கே ஆடியிருக்கிறார்கள். காரைதீவு, கல்லாறு, கிரான்குளம், புதுக்குடியிருப்பு, கல்லடி உப்போடை, வந்தாறுமூலை, போன்ற இடங்களுக்குச் சென்று நானும் ஆடியிருக்கிறேன்.

சிறுகதை,நாவல்,நவீன கவிதை (வ.அ.இராசரெத்தினம், நவம், வ.உ.சேகரன், நீலாவணன், பரணர்) எனப் பலதுறைகளிலும் கிழக்கிலங்கை யிலுருவான ஆரம்பகால நவீன படைப்பாளர் பலருக்கு முக்கிய களம் அமைத்துக் கொடுத்ததில் மட்டக்களப்பு அரசினர் ஆசிரிய கலாசாலைக்கு பங்கிருந்தமை பற்றி அறியப்பட்டளவிற்கு கூத்துக்கலை சார்ந்த மூனாகானாவின் செயற்பாட்டிற்கு மேற்குறிப்பிட்டவாறு கணிசமான பங்காற்றியிருந்தமை பற்றி இன்று வரை பரவலாக அறியப்பட்டிருக்கவில்லை.

---



# கலைமணம் கமழும் மூத்த கலைஞன் மு.க

எஸ்.எதிர்மன்னசிங்கம்

கிழக்கு பல்கலைக் கழகத்தின் 'தலைக் கோல்' விருதினைப் பெற்றவரும் கலை மணம் கமழும் ஆரையம்பதியின் மூத்த கலைஞருமான மு.க என எல்லோராலும் பாராட்டி அழைக்கப்படும் கலைஞர் மு. கணபதிப்பிள்ளை மிகச் சிறந்த கூத்துக் கலைஞராவார். நான் மட்டக்களப்பு கச்சேரியில் மாவட்ட கலாச்சார உத்தியோகஸ்தராக கடமை பார்த்த காலத்திலிருந்தே அறிமுகமானவர்.

கூத்து ரசிகர்களுக்கு காலத்திற்கேற்ப நகைச்சுவையோடு கூத்துக்களைத் தயாரித்து வழங்க விரும்பி 'போடியார் மகள் " 'பரிசாரி மகன் "ஆகிய கூத்துக்களைப் பிரபல அண்ணாவியார் நல்லலிங்கம் அவர்களுடன் சேர்ந்து ஆடிமக்களின் பெருவரவேற்பைப் பெற்றவர். மட்டக்களப்பு மாவட்டத்தில் பல இடங்களில் இக்கூத்துகள் மேடையேற்றப்பட்டன. நல்லலிங்கம் அண்ணாவியாரும் மு.க அவர்களும் இணைந்து ஆடிய பரிசாரி மகன் பலரதும் பாராட்டைப் பெற்றமை இன்றும் பசுமையாக உள்ளன. கூத்துப் பாடல்கள் மெட்டு தாளம் தாளக்கட்டு முறியாமல் சம காலப் பிரச்சினைகளை கூத்தின் மூலம் மக்களுக்குள் கொண்டு சென்றதில் மு.க ஆற்றிய பணிகள் பாராட்டுக்குரியவை.

மு.க அவர்களுக்கு கவிதை புனையும் ஆற்றலும் இயல்பாகவே இருந்தது. பல கவியரங்குகளில் கவிதை படித்ததோடு தலைமை தாங்கியும் கவியரங்குகளை நடத்தினார். நாட்டுப் பாடல்களைச் சுவையாகப் பாடும் திருமதி.சந்திரசேகரம் என்று நினைக்கிறேன் அவர்களையும் எனக்கு அறிமுகம் செய்து பல நிகழ்வுகளை மாவட்ட மட்டங்களில் அரங்கேற்ற துணை நின்றவர்.

மு.க அவர்கள் தொண்ணூற்று ஐந்து வயதினைக் கடந்து விட்ட போதும் உடல்உறுதியும் குரல் வளமும் சற்றும் குறையாமல் இருப்பதை அண்மையில் மண்முனை வடக்கு கலாச்சார அதிகார சபையினால் ஒழுங்கு செய்யப் பட்ட கலை விழாவில் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்ட போது கண்கூடாகக் காணக் கூடியதாக இருந்தது. மண்முனைப் பற்று கலாச்சாரப் பேரவையின் வளர்ச்சிக்கு அரும்பணியாற்றியுள்ளார். கலாச்சாரப் பேரவை வெளியிட்டுள்ள கலைஞர்கள் பற்றிய விபரங்கள்அடங்கிய நூலில் மு.க பற்றிய சகல தகவல்களும் உள்ளன.

மரபு வழிக்கூத்திற்குரிய சகல அம்சங்களான ஆட்டம் பாட்டு தாளக்கட்டு யாவும் புதிய பாணிக்கூத்தில் இடம்பெறச் செய்த பெருமையும் இவருக்குரியதேயாகும்.

---

# எங்கள் மூத்த அண்ணாவி ஆரையூர் மு.க எனப்படும் கலாபூசணம் மு.கணபதிப் பிள்ளை

பால சுகுமார்
முன்னாள் முதன்மையாளர், கலை கலாசாரப் புலம், கிழக்குப் பல்கலைக் கழகம்.



கிழக்குப் பல்கலைக் கழக நுண்கலைத் துறை 'தலைக்கோல்' விருது பெற்ற கிழக்கின் தலை கலை மகன்

அண்ணாவியார், கவிஞர், மரபு வழிபாட்டு ஆராய்ச்சி அறிஞர் என பன்முகத் தன்மை கொண்ட படைப்பாளி. ஆரையம்பதியின் அதன் வரலாற்றையும் கலாசார. பண்பாட்டு விழுமியங்களையும் உலகறியச் செய்வதில் பெரும் பங்காற்றி ஆரையம்பதிக்கு பெருமை சேர்த்த முதல் தலை கலை மகன்.

கூத்து மீளுருவாக்கம் என்ற கோட்பாட்டு தளம் அதற்கான உரிமை கோரல் வாதப்பிரதி வாதங்கள் நீண்டிருக்கும் இந்த காலகட்டத்தில் கலைஞர் சத்தமின்றி கூத்தில் புதிய மாற்றங்களை இன்றைய கூத்து பிதாமகர்கள் பிறக்காத அறுபதுகளில் கலைஞர் மு.க கூத்துக்களில் அதன் கதை கூறலில் புதிய உள்ளடக்கப் புனைவை சமூகப் பிரச்சினைகளை மையமிட்டு நிகழ்த்திக் காட்டியவர். அந்த கூத்துக்கள் நவீன கூத்துக்கள் மக்கள் மத்தியில் மிகுந்த வரவேற்பை பெற்றன. கூத்து மீளுருவாக்க முன்னோடிகளில் ஒருவர் நம் மு.க.

பல விருதுகள் அவரை தேடி வந்தடைந்தன இலங்கை அரசின் விருது வடக்கு கிழக்கு மாகாண அரச விருது, கிழக்கு மாகாண இலக்கிய விருது என பல விருதுகளைப் பெற்றாலும் கிழக்குப் பல்கலைக்கழக நுண்கலைத் துறை 'தலைக்கோல்' விருது கொடுத்து கிழக்கின் தலை கலை மகனாக மதிப்பளித்தமை இங்கு குறிப்பிடத்தக்கது.

அவருடனான பரீட்சயம் நான் கிழக்குப் பல்கலைக் கழக விரிவுரையாளராக கலைப்பீடாதிபதியாக கடமையாற்றிய காலங்களில் அவரோடு உரையாட அவர் அனுபவங்களை என்னுள் பகிர்ந்து கொள்ள கிடைத்த அந்த நாட்கள் எனக்கு கிடைத்த ஒரு பேறாகவே கருதுகிறேன்.

மட்டக்களப்பின் பண்பாடு வரலாறு மரபு வழிக் கலைகள் என்பவற்றில் ஒரு முதிர்ந்த அறிஞர் ஆரையம்பதி சமூகம் அவரால் பெருமையுறுகிறது.

கிழக்கு மாகாணம் பற்றிய அறிதலில் ஒரு பல்கலைக் கழகமாக திகழும் மு.க அவர்களுக்கு கிழக்குப் பல்கலைக் கழகம் இலக்கிய கலாநிதி பட்டம் அளித்து தன்னை கௌரவப் படுத்திக் கொள்ள முடியும். இந்த மகா கலைஞனை வாழும் போதே வாழ்த்தி மகிழ்வோம்.

## மூத்த கவி மூனாக்கானா

ஆரையூர் பதி தனிலே
பிறந்து வந்த கலையின் செல்வன்
ஆறாத ஆசையிலே
வளர்த்தெடுத்தான் கலைகளையே
கலைத்தாயின் புதல்வன் அவன்
கடைந்தெடுத்த கலைஞனவன்
இன்று வரை நம்மோடு
உலாவரும் உத்தமனாம்
இயல் இசை நாடகமோ
கூத்துக்கு இவன் பெயர்தானோ
ஊர் போற்ற வாழ்ந்து விட்டு
உலகை விட்டு போனவரை ஊர் கூடி விழா எடுக்க
நான் கேட்டு வியந்ததுண்டு

இன்று
நம்மோடு வாழுகின்ற கலைகளின் கலைஞனவன்
'கா' வினால் விழா கண்டு களை கட்ட நிற்கின்ற
கண் கொள்ளா காட்சி தனைக்
கண்டு கண் பூரிக்குதே.

கிழக்கிலே உதித்தவன் தான்
கலைகளால் ஒளிர்பவன் தான்
இவன் என்றும் இவ்வுலகில் பல பட்டம் பெற்றவன் தான்
அதனோடு தான் இதுவும்
பெருமையுடன் சேர்ந்திடவே
'கா' கலை இலக்கிய வட்டம்
தந்து விடும் மூனாகானாவுக்கு
'கலைஞாயிறு' எனும் பட்டம்.
பட்டம் எல்லாம் சொக்கி விடும்
மூனா கானா பெயர் சொன்னால்
நின் கலைத்தாகம் தீராமல்
நீடுழி வாழ்க ஐயா !

'கா' இலக்கிய வட்டம் சார்பாக - நிலாந்தி சசிக்குமார்

'கலைஞாயிறு' - மூனாக்கானா அவர்களின் கலை இலக்கிய சேவையை

# காவும் கலைஞாயிறும்



மட்டக்களப்பு இலக்கிய வரலாற்றில் ஆரையம்பதி இலக்கியமானது செழுமை மிகுந்த வரலாற்றை கொண்டிருக்கிறது. அது மரபு இலக்கியமாயினும் சரி. நவீன இலக்கியமாயினும் சரி தனக்கென தனித்துவமான பண்புகளை கொண்டு இன்று வரை விளங்குகிறது.

குமாரசாமி ஐயர். பண்டிதர் பூபாலபிள்ளை. அளகேச முதலியார். விவேகானந்த முதலியார் என்று மரபின் சாயல் ஒரு புறமும். நவம். அன்புமணி. வ.ச.சேகரன். ஆரையூர் அமரன். ஆ.தங்கராசா. என்றும் மற்றும் பி.ரவிவர்மன். திசேரா. மலர்செல்வன். சொ.பிரசாத். ம.பவித்திரன் என்று நவீனத்துவத்தின் தொடர்ச்சி மறுபுறமும் விளங்கும் ஆரையூரின் இலக்கிய செல் நெறியில் மூனாக்கானா எனும் மு.கணபதிப்பிள்ளையும் ஓயாது 75 ஆண்டுகளாக எழுதிக் கொண்டே தனக்கென ஓரிடத்தை பிடித்து இவ்வரலாற்று ஓட்டத்தில் தொடர்கிறார். (மேலே குறிப்பிட்ட பட்டியல் முழுமையானவை அல்ல சில மாதிரிகள் மட்டுமே)

கூத்து. நாடகம். வில்லூப்பாட்டு. கவிதைகள். சிறு கதைகள். சிறுவர் கதைகள். கட்டுரைகள் என்றவாறு மரபு. பாரம்பரியம். நவீனத்துவம் என்று படைப்புக்களினூடு பயணித்துக்கொண்டிருக்கும் பயணி. இலக்கிய கூட்டங்கள். கலாச்சார பேரவைகள் மற்றும் நினைவு மன்றங்கள் போன்றவைகளில் பங்கு பற்றி பங்காளராவதுடன் செயற்பாட்டாளராகவும் திகழ்பவர். ஆரையூரின் அவரில்லாத இலக்கிய நிகழ்வுகளை காண்பது அரிது. படைப்பாளராகவும் செயற்பாட்டாளராகவும் திகழும் இவர்.

இன்று 95 வயதைக் கடந்த இவ் இளைஞனைப்பற்றிய சிறிய மலர் ஒன்றினையும் குறும் ஆவணப்படம் ஒன்றினையும் வெளியீடு செய்தும் பட்டமும் பட்டாடையும் மாலையும் வழங்கி கௌரவித்து ஊருடன் நாமும் இணைவதினூடாக 'கா' வும் கர்வம் மிகு மகிழ்ச்சியில் திளைக்கிறது. இவ்வாய்ப்பை வழங்கி எம்முடன் ஓடி ஒத்துழைத்த உறவுகளுக்கும். கட்டுரை கவிதையாளர்களுக்கும் காவும் காவின் செயற்பாட்டு உறவுகளும் தலைசாய்த்து மகிழ்ச்சியையும் நன்றிகளையும் தெரிவித்துக் கொள்கிறது.

நன்றி.
காவிற்காக
ச.மணிசேகரன்.

# வாழ்த்துப்பா

வங்கக் கடலாடை தரித்து வளமோங்க
சங்கத்தமிழ் சதிராடும் மட்டு நகரினிலே
பொங்கிக் கலைசுரக்கும் ஆரையம் பதியூரின்
தங்கம் எனப்பிறந்த தலைமகன் 'மூனாக்கானா'

முளைவிடும் போதே கலைத்தாயின் கண்பார்வை
மழைத்தூறலாய் இவர்மீது வீழ்ந்ததால் தானோ
விளையாடும் பருவத்தில் கலைக்களம் பலகண்டு
கிளைவிடும் கலைவிருட்ச மாக இவர் நிமிர்ந்தார்

நயமாய் கல்விபெற்று ஆசிரியராய் மலர்ந்து
தயவாய் கல்வியோடு கலையினையும் வளர்த்து
இயற்பெயர் கணபதிப் பிள்ளை முதலோடுதந்தை
பெயரின் முதலினைத்து மூனாக்கானாவாய் நிலைத்தார்

பாரம்பரிய நாட்டுக் கூத்து அதனில்
மரபு தவறாது நவீனத்துவம் கலந்து
சிரத்தையுடன் பலமுயற்சிகள் செய்து
தரமான கலைப்படைப்புகள் தந்தார்

நாடக எழுத்தார் நயமான நெறியாளர்
நாட்டுக் கூத்தின் நலம்பேணுங் காவலர்
நாட்டமாய்ஆய்வுசெய்து கட்டுரை படைப்பவர்
தடம்பதித்த கவிஞரென இவருக்கு பல முகங்கள்

நாளும் பொழுதும் அயராது வாழ்நாளில்
மொழிக்கும், கலைக்கும் வளஞ்சேர்த்த பெருமகனை
வாழும்போதே வாழ்த்த 'கா' இலக்கிய வட்டமுடன்
வளஞ்சேர் ஆரையூர் மக்களும் இணைந்தனரே

கலை வளர்த்த பெரு மகனே
கலைத் தாயின் தலை மகனே
"கலை ஞயிறு" என்ற பட்டமது வழங்குகிறோம்
கலையாத புகழுடன் நீடு

கவிஞர் சோ.அருளானந்தம்

## ‘கா’ வின் கலை இலக்கியப் பயணம்

ஆரையம்பதியை தளமாக கொண்டு தமிழர்களின் கலை இலக்கிய செயற்பாடுகளில் தன்னை ஈடுபடுத்தும் ‘கா’ கலை இலக்கிய வட்டம் தனது பயணத்தின் தொடக்க காலத்தில் நிற்கின்றது.

கா’ என்ற கலை இலக்கிய சஞ்சிகை வெளியீட்டின் மூலம் ஆரம்பமான இந்த தொடக்கப்புள்ளி சிறிய இடைவெளிகளின் பின்னர் ஜேர்மன் ஆவணக் காப்பாளரது ஆவணக்கண்காட்சியை நடாத்தி தனது பயணத்தை வேகப்படுத்துகின்றது. தொடர்ந்து ....

புலம்பெயர் தேச படைப்பாளி குணாகவியழகனின் நான்கு நாவல்களினது கலந்துரையாடலும் அதனை தொடர்ந்து ஈழத்தின் மூத்த படைப்பாளி ஆரையம்பதி நவம் அவர்களின் ‘நீள நினை-தல்’ நிகழ்வும் நினைவு மலர் வெளியீடும் என பயணித்து இன்று கிழக்கின் முதுசொமென கருதப்படும் திரு.மு.கணபதிப்பிள்ளை அவர்களின் கலை இலக்கிய சேவையை ஆரையம்பதி மக்கள் சார்பாக கௌரவிப்பதன் மூலம் முதுசொம் ஒன்றின் அடையாளங்களை பதிவுகளாக்க முனைகின்றது.

தமிழர்களின் கலை, இலக்கியம் மற்றும் வரலாற்றுப் பதிவு என பணியாற்றும் எவருடனும் எமது ‘கா’ கலை இலக்கிய வட்டம் தயாரக இருக்கின்றது என்பதுடன், விரைவில் கன்னிப் படைப்புகளுக்கான களம் ஒன்றை முதன்மைப்படுத்தி வெளி வர இருக்கும் ‘கா’ கலை இலக்கிய சஞ்சிகை அச்சு மற்றும் மின் இதழாக காலாண்டுக்கு ஒரு முறை மலரும் என்ற மகிழ்ச்சியான சேதியோடு.

எமது செயற்பாடுகள் அனைத்திலும் எம்முடன் ஒத்துழைக்கும் அனைத்து நெஞ்சங்களையும் நன்றியுடன் நினைத்துகொண்டு, கிழக்கின் முதுசொம் திரு. மு. கணபதிப்பிள்ளை ஐயாவின் பணி தொடர இறைவன் துணை வேண்டி நிற்கின்றோம்.

“இப்போதுதான் துளிர்விட ஆரம்பித்துள்ளது, விழுதுகள் நிலத்தை தொடும் வரை தொடரும்”

நன்றி
‘கா’ வுடன்
பிரசாத் சொக்கலிங்கம்

‘கா’ கலை இலக்கிய வட்டத்தின்
ஏற்பாட்டில்
ஈழத்தின் மூத்த படைப்பாளி
ஆரையம்பதி நவம்
(சீனித்தம்பி ஆறுமுகம்)
அவர்களை
நீள நினைதலும்
“நவம்” நினைவு மலர் வெளியீடும்
தலைமை
ச.மணிசேகரன்
பிரதம அதிதி
பேராசிரியர் சி.மௌனகுரு
சிறப்பு அதிதி
கவிஞர் மு.கணபதிப்பிள்ளை
உரைகள்
கலாநிதி வ.குணபாலசிங்கம்
எழுத்தாளர் வி.மைக்கல் கொலின்
06.05.2018 ஞாயிறு காலை 9.30 க்கு
மட்டக்களப்பு பொது நூலக கேட்போர் கூடத்தில்
அனைவரையும் அன்புடன் அழைக்கின்றோம்
www.arayampathy.lk

‘கா’ கலை இலக்கிய வட்டத்தின் ஏற்பாட்டில்
‘மூனாக்கானா’
அவர்களின் கலை சேவையை வாழ்த்தி கௌரவித்தல்
தலைமை
பேராசிரியர்.சி.மௌனகுரு
கிழக்கு பல்கலைகழக ஓய்வு நிலை பேராசிரியர்
பிரதம அதிதி
திரு.மா.உதயகுமார்
மாவட்ட செயலாளர். அரசாங்க அதிபர். மட்டக்களப்பு
கௌரவ அதிதிகள்
திரு.சோ. மகேந்திரலிங்கம்
கௌரவ தவிசாளர். ஆரையம்பதி
திருமதி.ச.நமசிவாயம்
பிரதேச செயலாளர், ஆரையம்பதி
திரு.சி.ராஜேந்திரன்
பீடாதிபதி. மட்டக்களப்பு கல்வியற்கல்லூரி
திரு.க.பாஸ்கரன்
வலயக் கல்விப் பணிப்பாளர். மட்டக்களப்பு கல்வி வலயம்
சிறப்பு அதிதிகள்
பேராசிரியர் .செ.யோகராசா
கிழக்கு பல்கலைகழக ஓய்வு நிலை பேராசிரியர்
செ.எதிர்மனசிங்கம்
முன்னாள் வட-கிழக்கு மாகாண கலாசார பணிப்பாளர்
சைவப்புலவர்.வி.றஞ்சிதமூர்த்தி
தலைவர். மட்டக்களப்பு தமிழ்ச்சங்கம்
விசேட அதிதிகள்
திரு.பூ.பிரசாந்தன்
தலைவர். ஆரையம்பதி ஆற்றல் பேரவை
திரு.வே.தவராசா
செயலாளர். மட்டக்களப்பு தமிழ்ச்சங்கம்
திரு.க.செல்லத்தம்பி
மூத்த நாடக நெறியாளர்
www.arayampathy.lk

‘கா’ கலை இலக்கிய வட்டத்தின் ஏற்பாட்டில்...
கலைஞாயிறு
மூனாக்கானா
அவர்களின் கலை இலக்கிய சேவையை
ஆரையம்பதி மக்கள் சார்பாக
வாழ்த்தி கௌரவித்தல்
30.06.2018 (சனி) பி.ப 3.30 | ஆரையம்பதி பலநோக்கு கூட்டுறவுச்சங்க மண்டபம்